19th September 1958]

Besides the schemes under the State Plan, the Central Government are also implementing certain schemes like the Neiveli Lignite Project and the Madras Harbour Expansion Scheme in this State under the Central Plan. Details of the proposed expenditure on those schemes are not available with the State Government.

SRI N. R. THIAGARAJAN : ஜில்லாவாரியாக கணக்குகள் இல்லாததால், குறிப்பிட்ட ஒரு சில இடங்களுக்கே, அதாவது பல்லவ நாட்டிலும், கொங்கு நாட்டிலும்தான் பணம் செலவிடப்படுகிறது, சோழ நாடு, பாண்டிய நாடு புறக்கணிக்கப்படுகிறது என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? (சிரிப்பு).

THE HON. SRI C. SUBRAMANIAM : இங்கு சில அரசியல் கட்சிகள் செய்யக்கூடிய பிரசாரத்தைப் பார்த்து நண்பர் தியாகராஜன் அவர்களும் "வடக்கு, தெற்கு" என்ற பிரிவினையை ஆரம்பிக்கிறார்களோ என்று நினைக்கிறேன். (சிரிப்பு.)

SRI A. GOVINDASAMY : ஒவ்வொரு மாவட்டத்திலும் செய்யக்கூடிய திட்டங்களைப்பற்றி "ஐந்தாண்டு சாதனைகள்" என்று சர்க்கார் புத்தகம் வெளியிட்டு இருக்கும்பொழுது, ஜில்லா வாரியாக தனித்தனியாக கணக்குகள் எடுப்பதில் என்ன சங்கடம் இருக்கிறது ? இனியாவது தனிக்கணக்கு எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்கு என்று பல லட்சக் கணக்கான ரூபாய்களைச் செலவழித்து ஆட்கள் நியமித்து ஒவ்வொரு ஜில்லாவிற்கும் தனியாக கணக்கு எடுக்க வேண்டும். இந்த சபையிலுள்ள அங்கத்தினர்கள் எல்லோரும் அது அவசியமென்று கருதினால், அதைப் பற்றி யோசிக்கப்படும்.

SRI K. R. NALLASIVAM : கிராமவாரியாக இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் செய்யக்கூடிய திட்டங்களைக் கணக்கெடுத்து ஜில்லாவாரியாக ஒரு சிறிய பிரசுரத்தை சர்க்கார் வெளியிட்டார்கள். அப்பொழுது இம் மாதிரி கணக்கு எடுக்கவில்லையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பூரா கணக்கும் அதிலே வராது. அந்தந்தப் பகுதிகளுக்குச் செலவழிக்கக் கூடிய தொகை மட்டும் தான் அதிலே வரும். உதாரணமாக, கல்வியை எடுத்துக் கொண்டால் அதற்காக எல்லா இடங்களிலும் பரவலாக தொகை செலவு செய்யப்பட்டு வருகிறது. இம்மாதிரி பல விஷயங்களில் பரவலாக செலவு செய்யப்படுகிறது. ஆனால் சில விஷயங்கள், அதாவது ரோடுகள் போடுவது, கிணறுகள் வெட்டுவது சில குறிப்பிட்ட இடங்களில் செய்யப்படுகிறது. இத்தனை ரோடுகள் போடப்பட்டன, இத்தனை கிணறுகள் வெட்டப்பட்டன என்பதைச் சொல்ல முடியும். ஆனால் ராஜ்யம் முழுவதும் செலவழிக்கப்படும் தொகையை கணக்கு எடுத்து, அதை ஜில்லாவாரியாக கணக்கிடுவது என்றால், அதற்கு ஒரு தனி இலாக்காவே வேண்டும்.

SRI K. SATTANATHA KARAYALAR : திட்டக் கமிஷன் சமீபத்திலே இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை புனராலோசனை செய்ததாகத் தெரிகிறது. அந்த அடிப்படையிலே நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் என்ன மாறுதல்களைச் செய்திருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் திட்டத்தில் எந்தவிதமான மாறுதலும் இல்லை.

### *Police*

* 309 *Q.*—SRI P. S. SANTHANAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of Police Circle Inspectors in our State and the number of Harijans among them;

[19th September 1958

(*b*) how many of these Harijan Circle Inspectors are now Deputy Superintendents of Police; and

(*c*) how many caste Hindu Circle Inspectors who have put in less service than Harijan Circle Inspectors were promoted as Deputy Superintendents from 1956 to December 1957?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The number of Inspectors of Police in this State is 270. Three of them are Harijans.

(*b*) & (*c*) None. Sir.

*Death in Police lock-up*

*310 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1957-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 27-ம் தேதி குடியாத்தம் தாலூகா, கே. வி. குப்பம் போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்பில் ஒரு தாழ்த்தப் பட்ட மாணவன் இறந்தது உண்மையா ?

(ஆ) அப்படியானுல், இதற்கு என்ன காரணம் ?

(இ) அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) & (*c*) The Assistant Collector, Tirupathur, conducted an enquiry into the affair. His enquiry has established that the individual committed suicide by hanging himself.

SRI V. K. KOTHANDARAMAN : போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத் துச் செல்லப்பட்ட அந்த தாழ்த்தப்பட்ட மாணவன் இறப்பதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்னுல் வரை நன்ருக இருந்தவன், இப்படி லாக்கப்பிலே வைத்து தற்கொலை செய்து கொண்டான் என்பது சரியல்ல. இதைப் பற்றி மீண்டும் புனராலோசனை செய்ய வேண்டுமென்று அந்தப் பையனின் தாயாரும், பொதுமக்களும் சர்க்காருக்கு விண்ணப்பம் செய் திருக்கிருர்களா ? அந்த அடிப்படையிலே மீண்டும் புனராலோசனை செய் வதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தற்கொலை செய்து கொள்பவர்களின் உடல் நிலைமை அதற்குமுன் நன்ருகத்தான் இருக்கும். ஆனுல் சில சமயங்களிலே வியாதிக் கொடுமையினுலும் தற்கொலை செய்துகொள்வது உண்டு. சட்டப்படி உதவிக் கலெக்டர் விசாரணை செய்து தான் முடிவு செய்திருக்கிருர். மேலும் எனக்குக் கிடைத்திருக்கும் தகவல் என்னவென்ருல் :—

The post-mortem examination of the body was held on the afternoon of 27th September 1957. The opinion of the Medical Officer who conducted the autopsy is that the deceased should have died sometime between 5 and 11 p.m. on 26th September 1957. No marks of injury other than the ligature mark on the neck and a small abrasion on his chin were found during the inquest.

SRI P. S. CHINNADURAI : நம்முடைய போலீஸ் லாக்காப்புக் களிலே தற்கொலை செய்து கொள்வதற்கான வசதிகள் அமைக்கப்பட்டிருக் கின்றனவா என்பதை அறிய விரும்புகிறேன். (சிரிப்பு.)